Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



உரிமை

உழைப்பவர்களுக்கு முழு உரிமை கொடுத்தால்தான் உழைப்பெல்லாம் செல்வக்குவியலாக மாறும்.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


வேண்டுவன

இன உணர்வு, பொது நல ஈடுபாடு, நாணயத் தன்மை இவையே ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டுவனவாகும்.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 25 - 8 - 82 புதன் வெளியீடு 26 - 8 - 82 வியாழன் இதழ்: 305

## வாடிய குடும்பங்களில் வளம்சேர்க்கும் நடவடிக்கை

# ஏழைகள் கடன் ரத்து

## தமிழக அரசு அவசரச் சட்டம்

சென்னை, ஆக. 25- கடன் தொல்லையால் கஷ்டப்பட்டு கண்ணீர் வடித்து அல்லல்படும் ஏழை-எளிய மக்களின் தொல்லைகளை அகற்றி, கண்ணீரைத் துடைக்க முதல்வர் புரட்சித்தலைவர் அரசு கடன் நிவாரண அவசரச் சட்டத்தை அறிவித்துள்ளது.

ஆண்டு ஒன்றுக்கு குடும்ப வருமானம் ரூ. 4800க்கு மேற்படாமல் உள்ள கிராம—நகர்ப்புற மக்களை வாழ வைக்கும் வரப் பிரசாதமாக கழக அரசு இதை அறிவித்துள்ளது.

ஏழை—எளிய—நலிந்த மக்களது நண்பனாம் முதல்வர் புரட்சித் தலைவர் ஏழைகளின் ரட்சகராக இருந்து செயல்பட்டு வருகிறார்.

ஏழை எளியோரை வாழவைக்க பல்வேறு திட்டங்களை அறிவித்து செயல்படுத்தி வருகிறார்.

அந்த வகையில் மற்றுமோர் வரலாற்று முக்கியத்துவம் பெற்ற நடவடிக்கையாக கடன் நிவாரண சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளது.

புதிய கடன் நிவாரண சட்டத்தை கூட்டுறவு சட்ட அமைச்சர் பொன்னையன் அறிவித்துள்ளார்.

### யார் யாருக்கு தகுதி?

தமிழ்நாடு அரசு கடன் நிவாரண அவசரச்சட்டம் 1982ஐ நேற்று அறிவித்துள்ளது.

நேற்று 24-ம் தேதி முதல் இந்த அவசரச் சட்டம் அமுலுக்கு வரும்.

இந்த அவசர சட்டம் 31-12-81ல் முடிவடைந்த ஆண்டில் ஆண்டு குடும்ப மொத்த வருமானம் ரூ. 4800 க்கு மேற்படாமல் உள்ள கிராம-நகர்ப்புற மக்கள் அனைவருக்கும் பொருந்தும்.

24—8—82க்கு முன்பு வாங்கியுள்ள கடன்கள் முழுவதுமாகரத்துசெய்ய இச்சட்டம் வகை செய்கிறது.

ஆனால் கடன் கொடுத்தவர் ஒரு விதவை—அல்லது பெற்றோர்களை இழந்து உரிய வயது வராத சிறுமி அல்லது சிறுவன் அல்லது தகப்பனாரை இழந்து உரிய வயது வராத சிறுமி அல்லது சிறுவன் அல்லது மணவிலக்கு அளிக்கப்பட்டுள்ள பெண்ணாக இருந்து அவர்களது சொத்து மதிப்பு இக்கடன் உட்பட ரூ.25 ஆயிரத்துக்கு மேல்போகாமல் இருப்பின் இச்சட்டம் பொருந்தாது.

அரசு, கூட்டுறவு சங்கங்கள் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனங்களிலிருந்து பெறப்பட்ட கடன்களுக்கு இச்சட்டத்தின் கீழ் விதிவிலக்கு அளிக்கப்படுகிறது.

இந்த அவசரச் சட்டத்தின் கீழ், கீழ்க்கண்ட

(2-ம் பக்கம் பார்க்க)

### டிஸ்மிஸ் ஆன 70 போலீசார்: குடியிருப்பை காலி செய்ய உத்தரவு

பம்பாய், ஆக. 25— பம்பாயில் 70 போலீசார் வேலையிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டனர்.

அவர்கள் போலீஸ் குடியிருப்பை 48 மணி நேரத்தில் காலி செய்ய வேண்டும் என்று உத்தரவிடப்பட்டுள்ளது.

பாதுகாப்பு சட்டப்படி கைதான இரு போலீசாருக்கும், தலைமறைவாகி விட்ட மற்றொரு போலீசாருக்கும், விடுப்பில் சென்ற போலீசாருக்கும் நோட்டீஸ் கொடுக்க முடியாத நிலை உள்ளதால், அவர்கள் குடியிருப்பின் வெளியே 'வீட்டை காலி செய்' என்ற நோட்டீஸ் ஒட்டப்பட்டுள்ளது.

### கருணாநிதிக்கு திருநாவுக்கரசு மீண்டும் சவால்

2-ம் பக்கம்

### பெரியகுளம் தேர்தல்: 3 பேர் வேட்புமனு

மதுரை, ஆக. 25— நடைபெற இருக்கும் பெரியகுளம் நாடாளுமன்றத் தொகுதிஇடைத் தேர்தலில் போட்டியிட இன்று 3 பேர் வேட்புமனு தாக்கல் செய்தனர்.

எம். எம். அனீபா, (உத்தமபாளையம்), ஜே. எஸ். கிருஷ்ணன் (மதுரை), சுப்புராஜ் ஆகியோரே அந்த மூவர்.

இதில் சுப்புராஜ் என்பவர் தி. மு. க.வில் கருணாநிதி எதிர்ப்புக் கோஷ்டி என்றும், புரட்சி தி.மு.க. என்ற பெயரில் கட்சி நடத்துவதாகவும் தெரிகிறது.

### அனைத்திந்திய அண்ணா தி.மு. கழக ஆட்சி மன்ற குழுக் கூட்டம்

பெரியகுளம் நாடாளுமன்ற இடைத் தேர்தலில் நம் கழகம் சார்பில் போட்டியிடும் வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க கழக ஆட்சி மன்றக் குழு வருகின்ற 31-8-82ம் தேதி (செவ்வாய்க்கிழமை) காலை 10 மணிக்கு மதுரையில் கூட உள்ளது.

மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள் தலைமையில் நடைபெற உள்ள இக்கூட்டத்தில் ஆட்சி மன்றக்குழு உறுப்பினர்கள் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

ஆட்சி மன்றக் குழு உறுப்பினர்கள் தவிர வேறு எவரும் கூட்டத்திற்கு அனுமதிக்கப்படமாட்டார்கள்.

ப. உ. சண்முகம்,
பொதுச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

சென்னை
25 8-82

குறிப்பு: உரியவர்களுக்கு அழைப்பிதழ் முறைப்படி அனுப்பி வைக்கப்படும்.

### இருதய நோய் சிகிச்சைக்கு

# மருத்துவமனை கட்ட செல்வி ஜெயலலிதா ரூ.55 ஆயிரம் நன்கொடை

சென்னை, ஆக. 25— இருதய நோய் அறுவை சிகிச்சைக்காக கட்டப்படுகிற புது மருத்துவமனைக்கு செல்வி ஜெயலலிதா ரூ. 55 ஆயிரம் நன்கொடை வழங்கி இருக்கிறார்.

சென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் அமைந்துள்ள 'பாண்டலே' மருத்துவமனை (நர்சிங் ஹோம்) இருதய அறுவைச் சிகிச்சையில் வரலாறு படைத்துக் கொண்டிருக்கிறது.

ஏராளமாக இருதய நோயாளிகளுக்கு இங்கே அறுவை சிகிச்சை நடைபெற்று அவர்கள் குணமடைகிறார்கள். இருந்தாலும் அறுவைச் சிகிச்சை நடைபெறுகிற போது, சில நேரங்களில் மின்சாரம் இல்லாமல் போகிற காரணத்தால் பாதிப்பு உண்டாக வாய்ப்பு இருக்கிறது.

மார்புக் கூட்டைத் திறந்து இருதய அறுவைச் சிகிசசை நடந்து கொண்டிருக்கிற போது மின்சார தடை ஏற்பட்டாலோ அல்லதுஒருவேளைமின்சாரம் தடைபடும் என்கிற எண்ணத்தோடு மருத்துவர்கள் அறுவைச் சிகிச்சையில் ஈடுபட்டாலோ அவர்களின் மனநிலையும், நோயாளிகள் அவர்களைசார்ந்தவர்களின் மனநிலையும் எப்படிஇருக்கும் என்பதைச் சொல்லவே தேவை இல்லை. உயிராபத்து ஏற்படுவதற்கும் இதுவே காரணமாகி விடலாம்.

### பெரிய நோக்கம்

இந்த அபாயகரமான குறைகளைப் போக்கி, ஏராளமான இருதய நோயாளிகளைக் காப்பாற்றவேண்டும் என்கிற பெரு நோக்கத்தோடு புதிய நர்ஸிங் ஹோம் ஒன்றைக் கட்டுவதற்கு 'பாண்டலே' இருதய சிகிச்சை நிறுவனம் முயன்று கொண்டிருக்கிறது.

### மகத்தான முதல் ஆதரவு

இந்த முயற்சிக்கு மகத்தான முதல் ஆதரவினை செல்வி ஜெயலலிதா தெரிவித்திருக்கிறார்.

இந்த மனித உயிரைக் காப்பாற்றுகிற மகத்தான சரித்திர முயற்சிக்கு ரூ. 55 ஆயிரத்தை இன்று செல்வி ஜெயலலிதா நன்கொடையாக வழங்கி இருக்கிறார்.



இந்த நன்கொடையின் மூலமாக உருவாகஇருக்கிற புதிய நர்ஸிங் ஹோமில் திறந்த இருதய அறுவைச் சிகிச்சை நடைபெறும். பொதுவாக மற்ற மருத்துவமனைகளில் இப்போது ஆகிற செலவில் இங்கே மூன்றில் ஒரு பங்குதான் ஆகும்.

ஒரு வருடத்தில் குறைந்தது 300 இருதய நோயாளிகள் இதில் சிகிச்சை பெறுவார்கள் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

### 2 எம். பி. ஆதரிப்பதாக மேனகா தகவல்

புதுடெல்லி, ஆக. 25— மேனகா காந்தியின் சஞ்சய் இயக்கத்துக்கு இ.காங்கிரஸ் எம்.பிக்கள் கல்பநாத் சோங்கர், ராமநாராயண திரிபாதி ஆகிய இருவரும் ஆதரவு தெரிவித்துள்ளதாக மேனகா கூறினார். அவர்கள் சுயேச்சை எம்.பி.க்களாக செயல்படுவார்கள் என்றும் அவர் தெரிவித்தார்.

## கடிபட்டுக் கத்தியதால் பிடிபட்ட கூட்டுத்திருடன்

சென்னை ஆக. 25— கடிபட்ட வேதனையால் கத்தியதால் கூட்டுத் திருடன் பொது மக்களிடம் பிடிபட்டான்.

இதுபற்றிய விவரம் வருமாறு:—

சென்னை அண்ணா நகரில் தாமஸ் என்ற தொழிலதிபர் வசித்து வருகிறார்.

நேற்று பகல் 1 மணிக்கு இரண்டு நபர்கள் வந்து இவரது வீட்டுக் கதவைத் தட்டினார்கள். தாமசின் மனைவி ஓமன் வயது 57 வந்து கதவைத்திறந்தார்.

உடனே ஒருவன் அந்த அம்மையாரை நோக்கிக் கத்தியை நீட்டினான். இன்னொருவன் அந்த அம்மையாரின் வாயைப் பொத்தினான். கத்தியை நீட்டியவன் அந்த அம்மையாரின் கழுத்தில் கிடந்த சங்கிலிகளை பறிக்க முயன்றான்.

உடனே அந்த அம்மையார், தனது வாயைப் பொத்தியிருந்த திருடனின் கையைப் பலமாகக் கடித்துக் கொண்டார்.

வலி பொறுக்க முடியாமல் அந்தத்திருடன், 'அய்யோ அம்மா' என்று கூப்பாடு போட்டான்.

இந்தச் சத்தத்தை கேட்டு உள்ளே தூங்கிக் கொண்டிருந்த தாமஸ் வெளியே வந்தார். அக்கம்பக்கத்தாரும் வந்து விட்டார்கள்.

கூட்டம் வந்ததும் கடிபட்டவன் தப்பி ஓடிவிட்டான். கத்தி வைத்திருந்த கூட்டுத் திருடன் பிடிபட்டான். பிடிபட்டவன் பெயர் பாஸ்கரன். அவனைப் போலீசார் கைது செய்து கத்தியையும் பறிமுதல் செய்தார்கள். மற்றவனைப் போலீஸ் தேடிவருகிறது.

## வளர்ச்சித் திட்டங்களை செயல்படுத்துவதில் தமிழக அரசு முன்னணியில் இருக்கிறது

### வறுமை-பசி-அறியாமையிலிருந்து மக்களை விடுவிக்க நடத்தப்படும்

# கழக அரசின் இயக்கம் உலகமே காணாதது

## புரட்சித்தலைவர் அரசுக்கு ஜனாதிபதி ஜைல்சிங் பாராட்டு



மதுரை, ஆக. 25— வறுமை, பசி, அறியாமை போன்றவற்றில் இருந்து மக்களை விடுவிக்க தமிழகஅரசு பல்வேறு திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இதுஒருமாபெரும்இயக்கம். உலகில் வேறு எங்கும் காண முடியாத இயக்கம் என்று ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

வளர்ச்சித் திட்டங்களைச் சிறப்பாகச் செயல்படுத்துவதில் தமிழக அரசு முன்னணியில் இருக்கிறது என்றும் ஜைல்சிங் கூறினார்.

மதுரைவந்த குடியரசுத் தலைவர் ஜைல்சிங். மதுரை மீனாட்சி கோவிலுக்குச் சென்று சாமி கும்பிட்டார். அவருடன் அவரதுமகள் மஞ்சித்கவுர் வந்திருந்தார்.

தமிழக அரசு சார்பில் ஜனாதிபதியுடன் அவரது நிகழ்ச்சிகளில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டார்.

அறங்காவலர் குழுத் தலைவர் வி. என். சிதம்பரம் வரவேற்று குடியரசுத் தலைவருக்கு கோயிலைச் சுற்றிக் காண்பித்தார்.

மீனாட்சி சுந்தரேஸ்வரரை வணங்கினார். தமிழிலும் சமஸ்கிருதத்திலும் விசேஷ அர்ச்சனை நடந்தது. கோவில் நகைகளை அவர் பார்வையிட்டார்.

மதுரை மாநகராட்சி சார்பில் ஜனாதிபதி ஜைல்சிங்குக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. மதுரைமீனாட்சி அம்மன் கோயில் சின்னத்தை மேயர் பாலகிருஷ்ணன் ஜனாதிபதியிடம் வழங்கினார்.

### பண்பாட்டின் மையம் மதுரை

வரவேற்புக்குப் பதில் அளித்து ஜனாதிபதி ஜைல்சிங் பேசியதாவது:-

பண்பாட்டின் மையமாகத் திகழும் மதுரை மாநகர மக்கள் அளிக்கும் இந்த அரிய வரவேற்பு எனக்குப்பெருமை தரும் நிகழ்ச்சியாகும்.

ஜனாதிபதியாகப் பதவி ஏற்ற பின் முதன் முறையாக மதுரை வந்துள்ளேன். பழைய மரபுகளையும், கடமை உணர்வுகளையும் மதுரை நமக்கு நினைவு படுத்துகிறது.

தொழில் வர்த்தகம், கல்வி ஆகிய துறைகளில் நாடு விடுதலை அடைந்த பின்னர் மாபெரும் திட்டங்கள் நாடெங்கும் செயல்படுத்தப்பட்டு உள்ளன.

வறுமை, பசி, அறியாமை போன்றவைகளில் இருந்து மக்களை விடுவிப்பதற்காக தற்போதைய [கழக] அரசு பல்வேறு திட்டங்களை மேற்கொண்டு இருக்கிறது. இது ஒரு பெரும் இயக்கமாகும். உலகில்வேறுஎங்கும் காண முடியாத அளவுக்கு இந்த இயக்கம் செயல்பட்டு வருகிறது.

### தமிழகம் முன்னணி

உலக அரங்கில் பெருமைப்படும் அளவுக்கு மிகப் பெரிய இடத்தை இந்தியா பெற்றுள்ளது.

(2-ம் பக்கம் பார்க்க)

## அமைச்சர் திருநாவுக்கரசு சூடான பதில்

# கசாப்புக்காரர் காருண்யம் பேசுவதா? கருணாநிதி, ஊழல் பற்றி கூறுவதா?

திருப்பத்தூர் (ராமநாதபுரம்)... [partly legible: திரு... ானை], ஆக. 25- ஊழலைப் பற்றி கருணாநிதி பேசுவது கசாப்புக் கடைக்காரன் ஜீவகாருண்யம் பற்றிப் பேசுவதுபோல இருக்கிறது என்று அமைச்சர் திருநாவுக்கரசு சுடச்சுட பதில் அளித்தார்.

பெரியகுளம் தொகுதியில் தி.மு.க. டெபாசிட் இழப்பது உறுதி என்றும் அவர் மீண்டும் கூறினார்.

ராமநாதபுரம் மாவட்டம், தொண்டியில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:—

தஞ்சை மாவட்டம், பெருமகளூரில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் நடைபெறவுள்ள பெரியகுளம் இடைத் தேர்தலைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன்.

இறந்தவர் தி.மு. கழக நாடாளுமன்ற உறுப்பினர். தி.மு.க. இடம் அது. இந்நேரம் தி.மு. கழகம் அங்கு போட்டியிடுகிறது என்று அறிவித்திருக்க வேண்டாமா? செயற்குழு முடிவு செய்யும் எனக் கருணாநிதி கூறுவது ஏன்—கருணாநிதி ஏன் பயப்படுகிறார் என்று கேட்டிருந்தேன்.

## 'டர்பன்டைன் புகழ் ஆசாமி'

கருணாநிதியின் ஆதரவு பத்திரிகை ஒன்று அமைச்சரின் "பேடித்தனமான" பேச்சு என்று வரிக்கு வரி விமர்சனம் செய்திருந்தது. "டர்பன்டைன் புகழ் ஆசாமி" என்னைப் பார்த்து தண்ணீர் போட்டு விட்டுப் பேசினாரா என்று எழுதியுள்ளது.

அவரது தரமும் - அவர் நடத்தும் பத்திரிகையின் தரமும் மக்கள் நன்கு அறிந்த ஒன்று. எனவே நான் கவலைப்படவில்லை.

ஆனால் என் பேச்சை பத்திரிகைகளில் பார்த்து கருணாநிதி அலறி அடித்து உடன் பிறப்புக்கு ஒரு பக்க மடலே தீட்டி இருந்தார்.

அவருக்கு உரித்தான வகையில் சில பழியையும் கட்டுக் கதைகளையும் வசை மொழிகளையும் அள்ளி வீசி இருந்தார்.

ஆனால் என் கேள்வி கருணாநிதியின் தன்மானத்தைக் குத்தி இருக்கிறது.

தேர்தல் நாள் வரை மகன் செத்தாலும் பரவாயில்லை, மருமகள் தாலி அறுத்தால் சரி என ஆளை நிறுத்தி விட்டு வேறு கட்சிக்கு வேலை பார்க்க கட்சித் தொண்டர்களுக்கு ரகசியக் கட்டளைகள் போகாது — திருப்பத்தூர் தேர்தலில் நடந்தது போல—என்றும் நம்புகிறேன்.

## தி. மு. க. டெபாசிட் இழக்கும்

நான் மீண்டும் சொல்கிறேன். கருணாநிதி கட்சி பெரியகுளத்தில் டெபாசிட் இழக்கப் போவது உறுதியிலும் உறுதி.

ஆள் நிறுத்துகிற அளவுக்கு இப்போதாவது ஞானம் வந்ததே அந்த நிலைமையைப் பாராட்டுகிறேன்.

## கருணாநிதி பதறுவது ஏன்?

தேர்தலைப் பற்றி சாதாரணமாக நான் பேசிய பேச்சுக்கு கருணாநிதி ஏன் இப்படி பாய்கிறார்? பதறுகிறார்! பழிச்சொல் வீசுகிறார்! தடித்த சொற்களைப் பயன்படுத்துகிறார் தன் மடலில்—இதுதான் எனக்குப் புரியவில்லை. சந்தர்ப்பவசத்தால் அமைச்சர் என்கிறார்.

ஏதோ இவர் மட்டும் அமைச்சராவதற்காகவே பிறவியெடுத்த ராஜ குடும்பத்தவரைப்போல.

குப்பைக் காகிதமாம்—தமிழ் மக்கள், விழித்தால் குப்பைத்தொட்டியில் கிடப்போமாம்.

கருணாநிதி முதல்வராக இருந்தால் தமிழ் மக்கள் விழித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று பொருள். மக்கள் கருணாநிதியை விரட்டி விட்டாலோ தமிழ் மக்கள் தூங்குகிறார்கள் எனப் பொருளாம்.

## புது வரலாறு

எழுபத்திரெண்டில் புரட்சித் தலைவரால் புது வரலாறு உருவாகியது. அதன்பின் தமிழ் மக்கள் விழித்துக் கொண்டதால் ஏற்பட்ட விளைவைத்தானே கருணாநிதி எழுபத்தி ஏழிலே சந்தித்தார்.

அண்ணாவின் மறைவுக்குப் பின் அதிர்ஷ்டவசத்தால் புரட்சித்தலைவரின் தயவால் முதல்வராகி—ஏற்றிவிட்ட ஏணியாம் புரட்சித்தலைவரை முதல்வர் பதவி கண்ணையும் கருத்தையும்மறைக்க இறுமாப்பில் கீழே தள்ளினர்.

கோபுரமாய் புரட்சித் தலைவர் இருந்தார். ஒட்டியிருந்த காகிதம் இன்னும் உயர தனியே பறக்க நினைத்தது. இறுதியில் எங்கோ விழுந்தது.

நான் கருணாநிதிக்கு பணிவோடு சொல்வேன். உங்கள் வயதுக்கு மரியாதை தரத் தயார்.

அரசியல் ரீதியாக எங்கள் வளர்ச்சியில் உங்களுக்கு எந்தப் பங்கும் இல்லை. சட்டமன்றத்தில் பேசிய டாக்டர் நாவலர் பதில் சொன்ன-கதையை மீண்டும் அவிழ்த்து விடுகிறார்.

உருட்டாலையாம். எண்பது இலட்சம் பணமாம் — தொகுதியில் உறவினர்களுக்கு வேலையாம்— புதுக்கோட்டை மாவட்டமே புகழ்கிறதாம்— ஆத்திரத்தைக் கொட்டுகிறார் - கருணாநிதி.

மூன்று உயர்மட்ட ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் குழு பரிந்துரை செய்து மற்ற மாநிலங்களுடன் ஒப்பிட்டு அமைச்சரவையில்வைத்து அதிகாரிகளை கலந்து சுமார் பத்தாயிரம் தொழிலாளர்களைக் காத்திட எடுத்த முடிவுகளுக்குக் களங்கம் சுமத்தி பொய்யைத் திரும்பத் திரும்பச் சொல்லி உண்மையெனத் தோன்ற வைக்கலாம் என்ற சித்தாந்தத்தைக் கையாள்கிறார்.

## கருணாநிதியா பேசுவது?

முறையற்ற எதையும் செய்ய புரட்சித்தலைவர் அனுமதிக்க மாட்டார். ஊழலைப் பற்றிக் கருணாநிதி பேசுவது கசாப்புக் கடைக்காரன் ஜீவகாருண்யம் பற்றிப் பேசுவது போன்றது.

கருணாநிதி ஆட்சி நடத்தவில்லை "கமிஷன் மண்டி அல்லவா நடத்தினார்" என்று சாதாரண கிராமத்து மக்களும் பேசுவது — கிராமத்துப் பழமொழியாகவே ஆகி விட்டது.

யாரைப் பற்றியும் எதையும் பேசலாம் கருணாநிதி. மற்றவர் பதில் சொன்னால் கோபம் கொதித்துக் கொண்டு வருகிறது.

முதல்வர் பதவி போய் ஆண்டு ஏழாகிறது. இன்னும் அந்த நினைப்பு உங்களை விட்டுப் போகவில்லை. மஞ்சள் குளிக்கும் பாட்டி கதைதான் நினைவுக்கு வருகிறது.

## காங்கிரசுக்கு வேண்டுகோள்

மீண்டும் என் வேண்டுகோள் —காங்கிரஸ் கட்சி அண்ணா தி.மு. கழகத்தை ஆதரிக்கவேண்டும்—அது தமிழகத்தில் வருங்காலத்தில் ஒரு புது வரலாறு உருவாக உதவும்.

இல்லையேல் தனித்து நின்று தன் சுய கவுரவத்தையாவது காத்துக் கொள்ள வேண்டும்.

தி.மு. கழகத்தை ஆதரித்தால் மக்கள் காங்கிரஸ் கட்சிக்கும், தி.மு.க.விற்கும் சரியான பாடம் புகட்டுவர். காங்கிரஸ்காரர்களே தயவு செய்து தி.மு.கழகம் டெபாசிட் பெற உதவாதீர்கள் — அது காங்கிரசின் கவுரவத்தை காப்பாற்றும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.



## ஆசிரியர் சங்கம்

சென்னை, ஆக. 25— தமிழ்நாடு முது நிலைப் பட்டதாரி ஆசிரியர் சங்க மாநில பொதுக் குழுக் கூட்டம் மதுரையில் நடைபெற்றது.

கீழ்க்கண்ட புதிய நிர்வாகிகள் அப்போது தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பி. கணேசன் பொதுச் செயலாளராகவும் வி. கண்ணபிரான் அமைப்புச் செயலாளராகவும், எஸ். ராமானுஜம், எம். பத்மநாபதாசு, பி.கே. மணி, துணைத் தலைவர்களாகவும், வி. கந்தசாமி பொருளாளராகவும், கே. ஜவஹர், எஸ். பரமசிவம், வி. திரவிய சேசுவதாசு ஆகியோர் இணைச் செயலாளர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பேச்சாளர் முகவரி

தளபதி சாதுராஜன்
478 எல்லீஸ் நகர்,
வீட்டு வசதி வாரியம்
மதுரை—10

# இந்துமகா கடலில் ராணுவ தளம் அமைப்பது கூடாது

## இந்தியா - மோரீஸ் கூட்டறிக்கை

போர்ட்லூயி, ஆக. 25—இந்து மகாக்கடலில் ராணுவ தளம் அமைக்கக்கூடாது என்று இந்தியா-மோரீஸ் வெளியிட்ட கூட்டறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது

பிரதமர் இந்திராகாந்தி மோரீஸ் தீவில் 3 நாள் சுற்றுப்பயணம் செய்தார்.

சுற்றுப் பயணத்தின் இறுதிக்கட்டத்தில் பிரதமர் இந்திராவும் மோரீஸ் பிரதமர் அனீருத் ஜக்னாத்தும் கையெழுத்திட்டு கூட்டறிக்கை வெளியிட்டனர்.



இந்துமகா சமுத்திரப் பகுதியிலுள்ள நாடுகளின் விருப்பத்திற்கு மாறாக இந்த கடற்பகுதியில் வல்லரசு நாட்டின் ராணுவ நடமாட்டம் இருப்பது குறித்து இருநாடுகளும் வருத்தம் தெரிவித்துள்ளன.

ஐக்கிய நாடுகள் சபை பொது அசெம்பிளித் தீர்மானத்தின்படி இந்து மகா சமுத்திரத்தை அமைதிப் பிரதேசமாக இருக்கவிட, தீவிரமாகப் பாடுபடவும் இருநாடுகளும் உறுதி பூண்டுள்ளன.

இந்துமகாசமுத்திரத்தில் உள்ள டீகோகார்சியா தீவு, ராணுவதளமாக மாற்றப்படலாம் என்ற ஐயப்பாட்டை இரு நாட்டுத்தலைவர்களும் தெரிவித்துள்ளனர்.

இந்தியா — மோரீஸ் நாடுகளின் நீண்ட காலத்திய நட்புறவை மேலும் பலப்படுத்துவதற்கான பேச்சு வார்த்தை மனப்பூர்வமானதாகவும், ஒருவரை ஒருவர்புரிந்து கொள்ளத் தக்க வகையிலும் நடந்தது என்றும் அந்த கூட்டறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## குடும்ப கார்டுக்கு அதிக சர்க்கரை

சென்னை, ஆக. 25. வரும் ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் ஆகிய மாதங்களில் வரும் பண்டிகைகளை முன்னிட்டு குடும்ப அட்டை உள்ளவர்களுக்கு ஒரு அட்டைக்கு இரண்டு கிலோ சர்க்கரை வழங்குமாறு எல்லா நியாயவிலைக்கடைகளுக்கும் தமிழக அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது.

இந்த சர்க்கரை வெளி மார்க்கெட்டின் விலைக்கு (அதாவது ரூ. 5) கொடுக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ஏழைகள் கடன்ரத்து..

(1-ம் பக்க தொடர்ச்சி)

நபர்கள், சட்டத்தின் பயனைப் பெறக் கூடிய கடனாளிகளாகத் தகுதி பெறமாட்டார்கள்.

ஒரு நபர் அல்லது அவரது குடும்ப அங்கத்தினர்களில் எவரும் 1—4—1981க்கு முந்திய இரண்டு நிதிஆண்டுகளில் ஒன்றிலோ அல்லது இரண்டு நிதி ஆண்டுகளிலுமோ வருமான வரி அல்லது விற்பனை வரி விதிக்கப்பட்டிருந்தால் அத்தகைய நபர்.

ஒரு நபர் அல்லது அவரது குடும்ப அங்கத்தினர்களில் எவரும் 1-10-81க்கு முந்திய 4 அரையாண்டுகளில் ஒன்றிலோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவைகளிலோ அல்லது 4 அரையாண்டுகளிலுமோ ஆண்டுமொத்த வாடகை மதிப்பு ரூ. 1,200க்குக் குறையாமல் உள்ள கட்டிடங்கள் அல்லது வேளாண்மை நிலமில்லாத இதர நிலங்கள்மீது வீட்டுவரி அல்லது சொத்துவரி விதிக்கப்பட்டிருந்தால் அத்தகைய நபர்.

ஒருநபர் அல்லது அவரது குடும்ப அங்கத்தினர்களில் எவரும் 1-10-1981க்கு முந்திய 4 அரையாண்டுகளில் ஒன்றிலோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவைகளிலோ அல்லது 4 அரையாண்டுகளிலுமோ, விவசாயம் அல்லாத மற்ற தொழில்களிலிருந்து ஈட்டிய ரூ. 1,200-க்கு மேற்பட்ட அரையாண்டு வருமானத்தின் மீது தொழில் வரி விதிக்கப்பட்டிருந்தால் அத்தகைய நபர் எனினும், அவரது ஆண்டு குடும்பவருமானம் ரூ. 4,800/-க்கு மேற்படும் போது மட்டுமே இந்த நிபந்தனை பொருந்தும்.

### 5 ஏக்கர் நிலம் இருந்தால்...

ஒருநபர் அல்லது அவரது குடும்ப அங்கத்தினர்களில் எவரும் தனியாகவோ அல்லது கூட்டாகவோ, இம்மாநிலத்தில் அல்லது வேறிடத்திலோ 10 ஏக்கருக்கு மேற்பட்ட பாசன வசதியற்ற விவசாயநிலம் அல்லது 5 ஏக்கருக்கு மேற்பட்ட பாசன வசதியுடைய விவசாய நிலம் வைத்திருந்தால் அத்தகைய நபரின் பாசன வசதியுள்ள ஒரு ஏக்கர் நிலம் பாசன வசதியற்ற 2 ஏக்கர் நிலத்திற்குச் சமமாகக் கருதப்படும்.

### எப்படி மனு அனுப்புவது?

ஒரு நபர் அல்லது அவரது குடும்ப அங்கத்தினர்களில் எவரும் தனியாகவோ, அல்லது கூட்டாகவோ, இம் மாநிலத்திலோ அல்லது வேறு இடத்திலோ ரூ.25000-க்கு மேற்படும் சந்தை விலை மதிப்பு உள்ள விவசாய நிலமில்லாத — அசையாச் சொத்தை வைத்திருந்தால் அத்தகைய நபர்,

இந்த அவசரச் சட்டம் வருவாய்த் துறையைச் சேர்ந்த தாசில்தார்களால் அமல் நடத்தப்படும்.

இந்த அவசரச் சட்டத்தின் கீழ் நிவாரணம் பெற விரும்பும் கடனாளிகள், தங்களுடைய வருட வருமானச் சான்றிதழ் மற்றும் தாசில்தார் அல்லது துணை தாசில்தார் அல்லது வட்டார வளர்ச்சி அலுவலர் அல்லது கூட்டுறவு சார்பதிவாளர் எவரேனும் ஒருவர் முன்பு செய்யப்பட்ட உறுதிப் பிரமாணம் இவற்றை இணைத்து நிவாரணம் கோரி சம்பந்தப்பட்ட தாசில்தாருக்கு அவசரச் சட்டம் வெளியிடப்பட்ட நாளிலிருந்து 6 மாத காலத்திற்குள் மனு செய்ய வேண்டும்.

நியாயமான காரணங்களிருந்தால் மனு செய்வதற்கு மேலும் ஒரு மாத காலம் அவகாசம்கொடுப்பதற்கு தாசில்தாருக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

மனு செய்வதற்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள படிவங்களை அந்தந்த தாலுக்கா அலுவலகங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

இவ்வாறு அரசு வெளியிட்டுள்ள அறிவிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## அரசு அலுவலகங்களில்

# தமிழ் ஆட்சி மொழி நடவடிக்கை தீவிரம்: அரசு உத்தரவு

சென்னை, ஆக 25— தமிழகத்தில் தமிழ்நாடு அரசு அலுவலகங்களில் தமிழை ஆட்சி மொழியாக்க 3 ஆண்டு முனைபபுத் திட்டத்தை அமுல்படுத்தி வருகிறது.

கடந்த 1-4-81 முதல் 17 துறைகளில் முதற்கட்டமாக தமிழை ஆட்சி மொழியாக்க அரசு உத்தரவிட்டுள்ளது.

இதையொட்டி இந்தத் துறைகளில்உள்ள ஆங்கில தட்டச்சு யந்திரங்கள் அனைத்தும் நீக்கப்பட்டிருக்கின்றன.

தமிழை ஆட்சிமொழியாக்கும் திட்டத்தை செயல்படுத்தும் இந்த 17 துறைகளிலும் அரசின் உத்தரவுகள் கடிதங்கள் ஆகியவற்றை கூடியவரை தமிழில் மட்டுமே வெளியிட வேண்டும்.

இந்தத் துறைகளின் அலுவலகங்களில் ஆங்கில தட்டச்சு யந்திரம் இல்லாததாலும், மொழிபெயர்ப்பில் தவறுகள் ஏற்பட்டு விடலாம் என்பதாலும் கூடியவரை தமிழிலேயே அந்தத் துறைகள் சம்பந்தப்பட்ட உத்தரவுகள், கடிதங்களை அனுப்பவேண்டும்.



இவ்வாறு அரசு உத்தரவு ஒன்றில் கூறப்பட்டுள்ளது.

## ஜைல்சிங் பாராட்டு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கோடிக்கணக்கான நம்முடைய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு இந்த மாபெரும் முயற்சிக்கு நாம் அனைவரும் ஒன்றுபட்டு தோள் கொடுக்க வேண்டும்.

வளர்ச்சித் திட்டங்களை சிறப்பாகச் செயல்படுத்துவதில் தமிழக அரசு முன்னணியில் நிற்கிறது.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் கூறினார்.

துணைமேயர் நவநீத கிருஷ்ணன் நன்றி கூறினார்.

### சத்துணவு திட்டம்

புரட்சித்தலைவர் செயல்படுத்திவரும் இலவச மதிய உணவுத் திட்டம் பற்றிய விவரங்களை அமைச்சர் பொன்னையனிடம் ஆர்வத்துடன் கேட்டறிந்தார்குடியரசுத் தலைவர். சத்துணவுத் திட்டம் பற்றிய விளக்கத்தைக் கூறி, அதுபற்றிய புத்தகத்தையும் ஜைல்சிங்கிடம் அமைச்சர் பொன்னையன் வழங்கினார்.

## கழகத்தின் கவசம் மக்கள் சக்தியே:

# கருணாநிதியின் முனை மழுங்கிய கணையால் கழகம் அழியாது

## ஆலடி அருணா பேச்சு

திருச்சி, ஆக. 25- கழகத்திற்கு மக்கள் சக்தி என்ற கவசம் இருக்கிறது. கருணாநிதியின் முனை இல்லாத கணைகளால் கழகத்தை ஒன்றும் செய்யமுடியாது என்று ஆலடி அருணா குறிப்பிட்டார்.

திருச்சிநகரத்தில் 8 வது வட்டத்தில் எவர்கிரீன் எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பில் நடந்த கூட்டத்தில் ஆலடி அருணா பேசினார்.

ஆலடி அருணா பேசியதாவது:-

பெரியகுளம் தொகுதியில் கழகத்திற்கு வாக்களிக்கக்கூடாது என்பதற்கு கருணாநிதி கட்சியைச் சேர்ந்த எம். எல். ஏ. ஒருவர் காரணங்களைச் சொல்லியிருக்கிறார்.

தனது கட்சியின் நிலையைப் பற்றி கூறாமல் அடுத்த கட்சி பற்றி மட்டும் பேசுவது தரங்கெட்ட அரசியல் வியாபாரம் ஆகும்.

அரசியல் அடிப்படையில் எந்தக் குற்றச்சாட்டினையும் அவர்களால்கூற இயலவில்லை.

பிற மாநிலங்களோடு ஒப்பிடும்போது தமிழகம் தாழ்ந்த நிலையில் உள்ளது என்று குற்றஞ் சாட்டி இருந்தால் தக்க பதில் தர முடியும்.

### தமிழகம் வழிகாட்டி

இந்தியாவிற்கு தமிழகம்தான் வழிகாட்டி என்பதை உறுதிப் படுத்த முடியும்.

குற்றச்சாட்டு இல்லாமல் இங்கே நல்லாட்சி நடைபெறுகிறது.

எனவேதான் தி.மு.க. வினர் தனிப்பட்ட பிரச்சினைகளைச் சொல்லி குழப்புகிறார்கள். சட்டம் ஒழுங்கு பிரச்னையைப் பொறுத்த வரை இங்கே செம்மையாக இருக்கிறது.

குறுகிய காலத்தில் நக்சலைட்டுகள் கொடுமையை ஒடுக்கிக் காட்டியவர் முதல்வர் புரட்சித் தலைவர்.

### அர்ச்சுனா விருது

மற்ற மாநிலங்களால் முடியாததை செய்து காட்டிய முதல்வருக்கு அர்ச்சுனா விருது வழங்க மத்திய அரசு முன்வர வேண்டும்.



கழக அரசுக்கு எதிராக பொதுப் பிரச்சினைகள், குறைகள் குற்றச்சாட்டுகள் இல்லாததால் மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பது போல தனிப்பட்ட பிரச்னைகளை எடுத்து கணைகளைத் தொடுக்கிறார்கள்.

இந்தக் கணைகள் எல்லாம் முனைகள் இல்லாதவை.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் மக்கள் சக்தி என்ற கவசத்தை அணிந்திருக்கிறது.

ஆகவே முனை அற்ற கருணாநிதிக் கட்சியின் கணைகளால் கழகத்தை ஒன்றும் செய்யமுடியாது.

இவ்வாறு ஆலடி அருணா பேசினார்.

## சங்ககிரியில் அமைச்சர் குழந்தைவேலு பேசுகிறார்

சேலம், ஆக. 25— சேலம் மாவட்டம் சங்ககிரியில் கழகப் பொதுக் கூட்டம் 27-ம்தேதி நடைபெறுகிறது. அந்தக் கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு பேசுகிறார்.

புதிய எடப்பாடிசாலை சங்ககிரியில் நடைபெறும் இந்தக் கூட்டத்திற்கு பி. தனபால் எம். எல்.ஏ. தலைமை வகிப்பார்.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு, பி. கண்ணன், போத்தனூர் மணிமாறன் அர்த்தநாரி, சி.எஸ் எம். கிருஷ்ணன், நடராஜன் மற்றும் பலர் பேசுகிறார்கள்.

## பிறப்பு

சென்னை டி. பி. சத்திரம் வெங்கடசாமி புரம் அண்ணா நற்பணி மன்றத்தலைவர் ர். ஆபழனிச்சாமியின் துணைவியார் ராணிக்கு கடந்த 22-ந் தேதி ஆண் குழந்தை பிறந்தது. தாயும் சேயும் நலமாக உள்ளனர்.

---



---


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras 600 029.
Editor:
E. PARASURAMAN.


---

அமைச்சர் குழந்தைவேலுவிடம் குழந்தைகள் சொன்னது:

# உணவு சுவையாக உள்ளது - வயிறு நிறைய தருகிறார்கள்

**கோயமுத்தூர். ஆக. 25-வயிறு நிறைய மதிய உணவு தருகிறார்கள். சாப்பாடு சுவையாக இருக்கிறது என்று அமைச்சர் குழந்தைவேலுவிடம் பள்ளிக்கூட குழந்தைகள் மகிழ்ச்சியுடன் கூறினார்கள்.**

தமிழக உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு கோவையில் அதிகாரிகளுடன் கலந்து பேசினார். கோவையை அடுத்த சுப்ரமணிய பாளையம் சத்துணவு திட்ட மையத்திற்கு திடீரென முன் அறிவிப்பு இன்றி சென்றார். அங்கு சத்துணவு சமையல் செய்து கொண்டு இருந்தார்கள். சமையலைப் பார்த்தார். அங்கு இருந்த ஆரம்பப் பள்ளி சிறுவர் சிறுமிகளிடம் சத்துணவு கொடுக்கப்படுவது பற்றி விசாரித்தார். போதுமான அளவு கொடுக்கிறார்களா? உணவு நன்றாக உள்ளதா என்று விசாரித்து அறிந்தார்.

சிறுவர்கள் உணவு நன்றாக இருப்பதாகவும் வயிறு நிறைய கொடுப்பதாகவும் மகிழ்ச்சியுடன் கூறினார்கள்.

அடுப்பில் தயாராகிக் கொண்டு இருந்த உணவை அகப்பையில் எடுத்துப் பார்த்தார். என்ன என்ன காய்கள்? இன்று எவ்வளவு போட்டுள்ளீர்கள் என சமையல் செய்பவர்களிடம் விசாரித்தார்.

## குழந்தைகளுடன் சாப்பிட்டார்

அங்கிருந்து பெரிய நாயக்கன் பாளையம் யூனியன் துடியலூர் ஆரம்பப் பள்ளியில் சத்துணவு பரிமாறுவதை திடீரென சென்று பார்த்தார்.

அங்குள்ள குழந்தைகளையும் விசாரித்தார். தலைமை ஆசிரியரிடமும் விசாரித்தார். குழந்தைகளுடன் சேர்ந்து சத்துணவு சாப்பிட்டார். உணவு மிகவும் சுவையாக செய்திருந்தனர்.

தினசரி வெவ்வேறு வகை உணவு செய்து போடுவதாகவும் கூறப்பட்டது. பள்ளியில் கீரைப் பயிர் செய்திருப்பதையும் அமைச்சருக்குக் காட்டினார்கள்.

அமைச்சருடன் கோவைத்தம்பி எம்.எல்.ஏ, சின்னராசு எம்.எல்.ஏ. கோவை மேற்கு தொகுதி அமைப்பாளர் சையதுமுகமது மற்றும் கட்சித் தொண்டர்களும் பிரமுகர்களும் அதிகாரிகளும் சென்றிருந்தனர்.

## அமைச்சர் பேட்டி

முன்னதாக கோவை சர்க்யூட் அவுசில் பத்திரிகை நிருபர்களுக்கு அமைச்சர் குழந்தைவேலு அளித்த பேட்டியின் விவரம் வருமாறு:-

டிசம்பர் இறுதிக்குள் பஞ்சாயத்து தேர்தல்களை நடத்த முயற்சித்து வருகின்றோம். இதுபற்றி விவாதித்து முடிவு எடுக்க அடுத்தமாதம் சர்வகட்சிக் கூட்டத்திற்குப் புரட்சித் தலைவர் ஏற்பாடு செய்துள்ளார்.

1981ம் ஆண்டு மக்கள் தொகையின் கணக்கெடுப்பை அடிப்படையாகக் கொண்டுதான் பஞ்சாயத்து தேர்தல் இட ஒதுக்கீடு செய்யப்படும். சர்வகட்சிக் கூட்டத்தில் இவை அனைத்தும் பற்றி பேசிமுடிவு செய்யப்படும்.

## நகர்ப் பகுதிகளில் சத்துணவு

அடுத்த மாதம் செப்டம்பர் 15-ந் தேதி அண்ணா பிறந்த நாள் முதல் எல்லா நகரப்பகுதிகளுக்கும் சத்துணவுத் திட்டம் விரிவுபடுத்தப் படுகிறது. கோவை மாநகராட்சிப் பகுதியில் 400 சத்துணவு மையங்கள் ஏற்படுத்தப்படும்.

(5-ம் பக்கம் பார்க்க)

(2 ம் பக்கம் தொடர்ச்சி)

ஒவ்வொரு மையத்திலும் 100 குழந்தைகளுக்கு சத்துணவு வழங்கப்படும். இதற்காக ஒவ்வொரு மையத்திற்கும் 28 ஆயிரம் ரூபாய் செலவில் புதிய கட்டிடங்கள் கட்டப்படும். செப்டம்பர் 10-ம் தேதிக்குள் இவை கட்டி முடிக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

---

தடுப்புக்காவல் சட்டத்தின் கீழ்

## 174 வழக்கு உள்ள பிரபல ரவுடி கைது

சென்னை, ஆக. 25— தடுப்புக்காவல் சட்டத்தின்கீழ், தண்டையார் பேட்டை ரெட்டைக்குழி தெருவைச் சேர்ந்த சின்னப்பையன் என்கின்ற ஆறுமுகம் (வயது 52) கைது செய்யப்பட்டான்.

அகஸ்தியா தியேட்டர் முன் சோடா புட்டிகளை வீசி கலாட்டா செய்து பொது மக்களிடையே பீதியை ஏற்படுத்தியதைத் தொடர்ந்து இவனைத் தண்டையார் பேட்டை இன்ஸ்பெக்டர் நாகூர் மொய்தீன் கைது செய்தார்.

கைதான ஆறுமுகத்தின் மீது 174 வழக்குகள் இருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

---

மருத்துவமனையில்

## முன்னாள் தலைமைநீதிபதி இஸ்மாயில்: கவர்னர் பார்த்தார்

சென்னை, ஆக. 25— சென்னை தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சை பெற்று வரும் தமிழக முன்னாள் தலைமை நீதிபதி எம். எம். இஸ்மாயிலை கவர்னர் சாதிக் அலி சந்தித்து அவரது உடல்நலம் பற்றி விசாரித்தார்.

சபாநாயகர் க. ராஜாராம், செய்தித்துறை அமைச்சர் ஆர். எம். வீ. ஆகியோரும் முன்னாள் தலைமை நீதிபதியைச் சென்று பார்த்தனர்.

நீதிபதி இஸ்மாயிலின் உடல் நலம் தேறி வருவதாகவும், இன்னும் 3 அல்லது 4 வாரங்கள் அவர் மருத்துவமனையில் சிகிச்சை பெறுவார் என்றும் அவரது மகன் டீன் தெரிவித்தார்.

---

# கோவை மாவட்டம்: ரூ. 18 லட்சம் செலவில் குடிநீர் சப்ளை

**கோயம்புத்தூர், ஆக. 25- கோவை மாவட்டத்தில் சில பகுதிகளில் குடிநீர் பற்றாக்குறையைப் போக்க 18 லட்சம் ரூபாய் செலவில் திட்டங்கள் மேற்கொள்ளப்படவிருக்கின்றன.**

கோயம்புத்தூர் மாவட்ட ஆட்சித் தலைவர் கே. மலைசாமி கோயம்புத்தூரில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:-

பருவமழை சரிவர பெய்யாததால் கோவை மாவட்டத்தில் சில பகுதிகளில் குடிநீர் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது. இதைப் போக்கி இந்தப் பகுதிகளில் குடிநீர் சப்ளை செய்வதற்கு 7 லட்சம் ரூபாய் செலவிலான திட்டம் ஒன்றை மாவட்ட நிர்வாகம் தமிழக அரசுக்கு அனுப்பியிருக்கிறது.

## மேலும் 200 கிணறுகள்

தவிர பூமிக்கடியில் மிகவும் குறைந்த நீர்மட்டம் உள்ள பகுதிகளில் 12 லட்சம் ரூபாய் செலவில் மேலும் 200 கிணறுகளைத் தோண்டுவதற்கும் திட்டமிடப்பட்டுள்ளது.

இவ்வாறு மாவட்ட ஆட்சித் தலைவர் மலைசாமி கூறினார்.

---

## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்



ஆக. 26, சிதம்பரம் (தெ. ஆ. மாவட்டம்)
27. சென்னை
28, அருப்புக்கோட்டை (ராமநாதபுரம் மாவட்டம்)
29, திருச்சி மாவட்டம்
30, 31 சென்னை
செப். 1 சிதம்பரம் (தெ.ஆ. மாவட்டம்)

---

# பள்ளி சுவர்களில் அசிங்கமாக எழுத அனுமதிக்காதீர்

அமைச்சர் அரங்கநாயகம் வேண்டுகோள்

**கோவை, ஆக. 25— பள்ளிச் சுவர்களில் அசிங்கமாக எழுதுவதை மக்கள் அனுமதிக்கக் கூடாது என்று அமைச்சர் அரங்கநாயகம் வேண்டுகோள் விடுத்தார்.**



குறிச்சி, கிணத்துக்கடவு ஆகிய இடங்களில் உள்ள சத்துணவுக் கூடங்களில் அமைச்சர் அரங்கநாயகம் திடீர் சோதனை நடத்தினார்.

அங்கிருந்த மாணவ மாணவிகளிடம் சத்துணவு போதிய அளவு போடப்படுகிறதா? குறித்த நேரத்தில் ருசியாக போடப்படுகிறதா எனவும் விசாரித்தார்.

### பரிசு வழங்கினார்

மாணவ மாணவிகள் உணவு சரியாகப் போடப்படுவதாக அமைச்சரிடம் தெரிவித்தனர். அமைச்சருடன் கோவைத்தம்பி எம். எல். ஏ, சையது முகமது, கே. பி. ராசு ஆகியோர் உடனிருந்தனர்.

குறிச்சி சுந்தராபுரத்தில் நடைபெற்ற பாரதி நூற்றாண்டு விழாவில் அமைச்சர் அரங்கநாயகம் கலந்துகொண்டு மாணவ மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கினார். கோவைத்தம்பி தலைமை வகித்தார்.

### பிரதமர் வருகிறார்

பாரதியார் பல்கலைக்கழக துவக்க விழா அடுத்தமாதம் (செப்டம்பர்) கோவையில் நடைபெறும் என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறினார். இந்த விழாவிற்கு பிரதமர் இந்திரா காந்தி வருகிறார் என்று தெரிவித்தார்.

மேலும் அவர் கூறுகையில் "குறிச்சி பள்ளிக்கு சென்றபோது அந்தப் பள்ளி சுவரில் அசிங்கமான வாசகங்கள் எழுதப்பட்டிருந்தன. இதைக் கண்டு திடுக்கிட்டேன். மிகவும் வருத்தப்படுகிறேன். இப்படி எழுத எப்படி துணிவு வந்தது என்பதை பார்க்க வேண்டும். பொது மக்கள் நமக்கு என்ன என்ற நிலையில் இருப்பதால் தானே இவை நடக்கின்றன? எந்த தவறையும் விடமாட்டோம் என்ற விழிப்புடன் இருந்தால் இப்படி ஒரு ஆரம்பப் பள்ளியில் யாரோ ஒரு சிலர் எழுதி வைப்பார்களா?

தவறைக்கேட்க பொது மக்கள் ஏன் பயப்பட வேண்டும்?" என்று கேட்டார்.

### சமுதாய விழிப்பு

இம்மாதிரி தவறுகளை கட்சி வேறுபாடு இன்றி தடுக்கவேண்டாமா? இது அரசியல் அல்ல. இளம் சிறுவர்கள் பள்ளியில் அசிங்கமாக எழுத அனுமதிக்கலாமா? அனைவரும் சமுதாயவிழிப்புடன் பொறுப்புடன் உணர வேண்டும் என்றும் அமைச்சர் அரங்கநாயகம் கேட்டுக்கொண்டார்.

விழாவில் மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரி சுப்பையா வரவேற்புரையாற்றினார்.

---

## காமராஜர் சிலை: ஜைல்சிங் திறந்தார்

மணப்பாறை, ஆக. 25- மணப்பாறையில் பெருந்தலைவர் காமராஜர் உருவச்சிலையை குடியரசுத் தலைவர் ஜைல்சிங் இன்று திறந்து வைத்தார். அவர் பேசுகையில் "காமராஜர் சாதாரணக் குடும்பத்தில் பிறந்து தன்னுடைய எளிய—நேர்மையான உழைப்பால் தேசத் தலைவராக உயர்ந்தவர்" என்று குறிப்பிட்டார்.

---

ஆசிய விளையாட்டுப் போட்டிகள்

## குருவாயூர் கோயில் யானைகள் டெல்லி செல்கின்றன

குருவாயூர், ஆக. 25— 1982ம் ஆண்டு ஆசிய விளையாட்டுப் போட்டிகள் டெல்லியில் வரும் நவம்பர் மாதம் நடைபெறவிருக்கின்றன.

இந்த விளையாட்டுப் போட்டிகளில் குருவாயூர் கோயிலைச் சேர்ந்த யானைகளும் கலந்து கொள்ள விருக்கின்றன. இதுகுறித்து கேரள முதலமைச்சர் கருணாகரன் குருவாயூர் கோயில் தேவஸ்தான அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார்.

எத்தனை யானைகள் அனுப்புவது, அவைபங்கு கொள்ளும் நிகழ்ச்சிகள் ஆகியவை பற்றிய விவரங்கள் விரைவில் அறிவிக்கப்படும்.

அனுப்பப்படும் யானைகளைகால்நடை மருத்துவர்கள் முறையாகசோதனை செய்து ஒப்புதல் அளித்த பின்னரே அந்தயானைகள் ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளும் என்றும் தேவஸ்தான அதிகாரி சங்கரன் குட்டி கூறினார்.

---

## தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் வாலிபன் கைது

சென்னை, ஆக. 25— தமிழக அரசின் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் பிரபல கேடி ஒருவன் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டான்.

அவன் பெயர் ராமு. (வயது 29) அவன் இதற்கு முன்பு 51 முறை சிறை சென்றவன்.

துணைக் கமிஷனர் குருவையா உத்தரவின் பேரில் உதவிக கமிஷனர் ராமப்பன் மேற்பார்வையில் இன்ஸ்பெக்டர் பிர்லா போஸ், சப்-இன்ஸ்பெக்டர் சிவராமன் ஆகியோர் தடுப்புக்காவல் சட்டத்தின் கீழ் ராமுவைக் கைது செய்து ஜெயிலுக்கு அனுப்பி வைத்தனர்.

---

# எம். ஜி. ஆர். இளைஞர் அணியினர் கவனிக்க...

எம். ஜி. ஆர். இளைஞர் அணி பதிவுத்தாள்கள் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகளுக்கும், கழக நிர்வாகிகளுக்கும் இன்று முதல் அனுப்பப்படுகிறது.

மன்றத் தோழர்களும், கழகத் தோழர்களும், உறுப்பினர் விண்ணப்பத்தாள்களை நிறைவுசெய்து தலைமைக் கழகத்துக்கு உரிய விண்ணப்பக் கட்டணத்துடன், 'எம். ஜி. ஆர். இளைஞர் அணி, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-14' என்ற முகவரிக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.

பி. முசிறிப்புத்தன், எம். எல். ஏ.
தலைவர்,
எம்.ஜி.ஆர். இளைஞர் அணி.

சென்னை—14
25-8-82

---



---



---



---

# பொங்குமாங்கடல்

## அங்கே அரை மணி; இங்கே மட்டும் முக்கால் மணி ஏன்?

**"15 நிமிடம் தமிழில் செய்தி வாசிக்கிறார்கள். பிறகு 15 நிமிடம் இந்தியில் செய்தி தருகிறார்கள். அதற்கு பிறகு இன்னொரு 15 நிமிடம் ஆங்கிலத்தில் செய்தி.**

இப்படியாக தமிழ்நாட்டு தொலைக்காட்சியில் செய்திகள் வருகின்றன. வடக்கே இந்தியில் 15 நிமிடமும், ஆங்கிலத்தில் 15 நிமிடமும் தான் செய்திகள். எனவே தமிழர்கள் செய்திகளைப் புரிந்து கொள்ள 45 நிமிடமாகிறது. இந்திக்காரர்களுக்கு 30 நிமிடமே போதும் என்றால் தமிழர்கள் புத்தியில் குறைந்தவர்களா அல்லது வேறு வேலையில்லாமல் இருக்கிறார்கள் என்று அர்த்தமா?" என்று திரு. டி. ஆம்புரோஸ் என்பவர் ஆசிரியர்க்கு கடிதம் மூலம் கேட்கிறார்.

சரியானது மட்டுமல்ல, நியாயமான கேள்வியும் கூட. தொலைக்காட்சிக்காரர்கள் என்ன செய்தாலும் தமிழ்நாட்டினர் எதிர்த்துப் பேச முடியாது என்று நினைத்து இப்படிச் செய்திருக்க வேண்டும் என்று அவர் வாதிக்கிறார். அதோடு இந்த நிகழ்ச்சிக்கா இவ்வளவு பணம் போட்டு தொலைக்காட்சி பெட்டி வாங்கினோம் என்றும் கேட்கிறார். உண்மை தான்!

இந்தியில் வரும் செய்திகளை யாரும் கேட்பதில்லை. அந்த 15 நிமிடமும் தமிழ் நாட்டைப் பொறுத்தவரை "வீணாகிறது". இதற்குப் பதிலாக வேறு நல்ல நிகழ்ச்சிகளை வைக்கலாமல்லவா?

இதே கதைதான் இதர தென்மாநிலங்களிலும். சாதாரண மக்கள் இதை உணருகிறார்கள். ஆட்சியிலுள்ளவர்கள் டெல்லி ஆளுங்கட்சியைச் சார்ந்தவர்களாக இருப்பதால் அவர்கள் வெளியே பேச பயப்படுகிறார்கள், மேலிடம் என்ன சொல்லுமோ என்ற அச்சம் அவர்களைப் பிடித்து ஆட்டுகிறது.

சாதாரண மக்கள் இந்தக் குறையைக் கூறுவார்கள். ஆனால் அது எடுபடுவதில்லை. மந்திரிகள் பேசினால்தான் குறை வெளிப்படும். இதுதான் இதர மாநிலங்களின் "மௌனத்தின் ரகசியம்"

இந்த மௌனத்தின் ரகசியம் டெல்லிக்குப் புரியாமலில்லை. புரிகிறது. லாபம் தானே என்று அவர்கள் சும்மாயிருக்கிறார்கள். எதிர்ப்பது தமிழ்நாடு ஒன்றுதான் என்று கூறுகிறார்கள். அவர்கள் இதை உணர்ந்து திருத்திக் கொள்ள வேண்டுமென்றால், வோட்டுப் பெட்டி வைக்கவேண்டும். பிறகுதான் அவர்களுக்கு விஷயம் புரியும்.

* * *

திரு. தீரேந்திர பிரம்மச்சாரி பற்றி நண்பர்கள் அறிவார்கள். பிரபல சாமியார் அவர். சனிக்கிழமை இரவு அவர் யோகப் பயிற்சி பற்றி ஒரு நிகழ்ச்சி நடத்தினார். அதில் பெண் ஒருத்தியும் வாலிபர் ஒருவரும் யோகப் பயிற்சிகளை செய்து காட்டினார்கள். இளைஞர்களுக்கு இப்பயிற்சி மிக அவசியம். வயதானவர்களும் பயிலலாம். இதில் தகராறு இல்லை, திரு.பிரம்மச்சாரி இடைக்கிடை இந்தியில் பேசி விளக்கம் தருகிறார். நிகழ்ச்சி பார்ப்பதற்கு நன்றாக இருந்தது. திரு. பிரம்மச்சாரி அருகில் மற்றொரு பெண்நின்று அவரும் ஒவ்வொரு அயிட்டமாக அறிமுகப்படுத்துகிறார். அந்த அம்மாளாவது ஆங்கிலத்தில் பேசியிருக்கலாம். நம் போன்றவர்களுக்கு புரியும். ஆனால் அந்த அம்மாளும் இந்தியில்தான் பேசினார்.

ஆகவே பயிற்சிகளை மட்டும் நாம் பார்த்தோமே ஒழிய விளக்கங்களை துளிக்கூடப் புரிந்து கொள்ள முடியவில்லை. திரு. பிரம்மச்சாரியைக் குறை சொல்வதற்கில்லை, காரணம் அவருக்கு இந்தியும் சமஸ்கிருதமும்தான் தெரியும். ஆங்கிலம் தெரிந்த ஒரு பெண் முகவுரையை ஆங்கிலத்தில் சொல்லலாமல்லவா? ஏன் சொல்லவில்லை? அதிகாரிகள் சொல்லவில்லை. அந்த அம்மாவும் சொல்லவில்லை.

அதிகாரிகள்தான் தமிழ்நாட்டினர் கஷ்டப்படுவார்கள் என்று உணரவில்லை. ஒருவேளை இது தமிழ்நாட்டுக்கு வேண்டாமென்று நினைத்தார்களோ என்னவோ?

இந்த நிகழ்ச்சி அரை மணி வரை நடந்தது. இந்திச் செய்தியோடு இதையும் சேர்த்தால் ஒன்றரை மணியில் முக்கால் மணி நேரம் அதாவது நேர்பாதி நேரம் "வேஸ்ட்" என்றாகிறது!

* * *

## பணக்கார மைனாரிட்டி

அமெரிக்காவில் குடியேறியிருக்கும் இந்திய விஞ்ஞானிகளின் எண்ணிக்கை 3 லட்சத்திலிருந்து 5 லட்சம் பேராம். இவர்களின் வருடாந்திர வருமானம் ஒரு நபருக்கு 45,000 டாலர் என்று திரு. எல். கே. ஜா கூறுகிறார். அதாவது சராசரி நாலரை லட்சம் ரூபாய் சம்பாதிக்கிறார்கள் என்றாகிறது. இதன்றி அலவன்ஸ் என்றும் பணம் உண்டு. பணக்கார மைனாரிட்டி வகுப்பாக இந்தியர்கள் அங்கு வாழ்கிறார்கள் என்கிறார் திரு. ஜா.

இவர்களை தாய்நாட்டுக்குக்கொண்டுவந்து இந்திய தொழில்வளர்ச்சியை முன்னேற்றவேண்டுமென இந்திய சர்க்கார் முயலுகிறது. தொழில்துறையில் மட்டுமல்ல. இதர வேலைகளிலும் இவர்கள் நிபுணர்களாக இருக்கிறார்கள். வருவாய் ஒருபுறமிருந்தாலும் மேற்கொண்டு ஆராய்ச்சிகள் செய்வதற்கு அங்கு வசதிகள் ஏராளமாக இருக்கின்றன. இந்த உண்மையை அரசாங்கம் உணருவதில்லை. அத்தோடு அங்கு சேமிக்கவும் வாய்ப்புகள் அதிகம். காரணம் வரி குறைவு. இந்தக் காரணங்களால்தான் இந்த நிபுணர்கள் தாய்நாடு திரும்ப மறுக்கிறார்கள். அவர்களுக்கு தேசபக்தி இல்லையா, அந்த உணர்வோடு "தியாக மனப்பான்மையும்" சேர வேண்டுமென டெல்லி கூறுகிறது. எல்லாம் சரி, ஆனால் லோகாயத தத்துவத்தில் ஊறிப்போன இக்காலத்தில் இந்த இதோபதேசங்கள் எல்லாம் எடுபடுமென நம்புவதற்கில்லை.



இந்தியாவில் இவர்களை வேலை செய்ய வைக்க வேண்டுமென்றால் வரிச் சலுகை காட்ட வேண்டும். இரண்டாவதாக ஆராய்ச்சிக்கு நிறைய வசதிகள் செய்து தரவேண்டும். இவற்றை முதலில் செய்துவிட்டுப் பிறகு அவர்களை அழைத்தால் ஒருவேளை ஐந்துக்கு இரண்டு பழுதில்லாமல் பலன் கிடைக்கலாம். மற்றபடி அமெரிக்காவில் குடியேறி, பிரஜா உரிமை பெற்று, திருமணமும் செய்துகொண்டு அமெரிக்கர் மாதிரி வாழ்கிற இந்தக் கூட்டம் இந்தியாவுக்கு வருமென்று தோன்றவில்லை. அப்படியே வந்தாலும் ரொம்பக் காலம் இருப்பார்களா என்பது சந்தேகம். தியாகம் என்று பேசுவது சுலபம். மற்றவர்களைக் கவரும்படி நாமும் அந்த தியாக மனப்பான்மையில் நடந்து காட்டவேண்டுமல்லவா? இதை எங்கே செய்கிறோம்?

## கோதுமை வருமா?

தமிழ்நாடு 11,000 டன் கோதுமை வேண்டுமென கேட்கிறது. அப்போது தான் ஒரு மாதத்துக்கு ஒரு குடும்பத்துக்கு ஒரு கிலோ கோதுமையாவது தரமுடியும் என்று தமிழக அரசு கூறுகிறது. ஆனால் நமக்குக் கிடப்பதோ 4000 டன் தான். இதற்கு என்ன காரணம்? கோதுமை உற்பத்தி குறைந்திருக்கிறதா அல்லது வேறு ஏதாவது காரணமா என்று தெரியாமலிருந்தது இப்போது அமெரிக்காவிலிருந்து 25 லட்சம் டன் கோதுமை இறக்குமதி செய்யப்போகிறார்கள் என்று செய்தி வந்திருக்கிறது. எனவே தமிழ்நாட்டுக்குப் போதுமான அளவுக்கு கோதுமை கிடைக்காமலிருந்ததற்குக் காரணம் உற்பத்திக் குறைவு என்று தெரிய வருகிறது.

**எஸ்.எஸ்.மாரிசாமி**

இப்போது அமெரிக்காவிலிருந்து கோதுமை வருவதால் தேவைக்குத் தகுந்தபடி இனி சப்ளை செய்யலாம் என்று டெல்லி மந்திரி திரு.ஆர்.வி.சாமிநாதன் கூறுகிறார். ரொம்ப மகிழ்ச்சி.

கோதுமைக்கும், அரிசிக்கும் மத்திய சர்க்கார் தான் கொள்முதல் விலையை நிர்ணயிக்கிறது என்பது நண்பர்களுக்குத் தெரியும். இதில் அடிக்கடியும் அதிகமாகவும் விலையைப் பெறுவதுகோதுமை. அரிசிக்கு அந்த பாக்கியம் இல்லை.

இப்படி அடிக்கடி உயர்வு விலையைப் பெறும் கோதுமை ஏன் பற்றாக்குறையாக இருக்கிறது என்று தெரியவில்லை. விவசாயிகளுக்கு உற்சாகம் குறைந்து வருகிறதா? சமீப காலம் வரை "உற்பத்தியில் பிரமாத சாதனையை ஏற்படுத்தியிருக்கிறோம்" என்று பேசினோம். இது உண்மையானால் பற்றாக்குறை ஏன்? ஒருவேளை நாம் ஏற்றுமதி வியாபாரம் செய்கிறோமா? அப்படியானால் உள்நாட்டுக்குத் தேவையானதைக் கொடுத்து விட்டல்லவா ஏற்றுமதி செய்ய வேண்டும்?

இந்த இறக்குமதியாகும் கோதுமை "கிடங்கில் அவசரத்துக்காக இருக்கும் கையிருப்பு" என்று கூறுகிறது இந்திய அரசு. அது எந்த இருப்பாக இருந்தாலும் சரி, தமிழ்நாடு கேட்கிற அளவைக் கொடுத்துவிட்டு என்ன செய்தாலும் வரவேற்கிறோம்.

முன்பெல்லாம், "அரிசியை மட்டும் தமிழ்நாடு சாப்பிடுகிறது. கொஞ்சம் கோதுமையையும் சேர்த்துக் கொண்டால் நல்லது" என்றார்கள். இது உடலுக்கு வலு கொடுப்பதோடு ரத்தக் கொதிப்பு, நீரழிவு போன்ற நோய்களை வரவழைக்காது என்றும் கூறினார்கள். அதற்கு மேலாக அரிசித்தட்டுப்பாட்டைப்போக்கும் என்றும் வாதாடினார்கள். திரு. லால்பகதூர் பிரதமராக இருந்த காலத்தில் கோதுமையின் புகழ்பாட ஓர் இயக்கமே நடந்தது.

இதையெல்லாம் கேட்டு தமிழன் கோதுமை உண்ணவாரம்பித்தான். அவன் அதன் மகிமையை உணரும்போது அவனுக்கு ஒரு கிலோ கூட கிடைக்கவில்லை என்றால் அதுவும் ஒரு குடும்பத்துக்கு ஒரு மாதத்துக்குக்கூட தரவில்லை என்றால் என்ன பொருள்?

முன்னே நடந்தது வெறும் பிரச்சாரம் என்று நினைக்க மாட்டானா?

திரு. ஆர். வி. சாமிநாதன் "எவ்வளவு வேண்டுமானாலும் தருகிறேன்" என்று கூறிவிட்டதால் அவர் சொன்னதைச் செய்வாரென்று நம்புவோம், அவர் நல்லவர்!

---

சத்துணவுத் திட்டம்:

## கருவூல கணக்குத்துறை ரூ. 40,000 நன்கொடை

சென்னை, ஆக. 25— முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்துக்கு கருவூலம் மற்றும் கணக்குத் துறை இயக்குனரக ஊழியர்கள் 40 ஆயிரத்து 309 ரூபாய் நன்கொடை அளித்துள்ளனர்.

இதற்கான காசோலையை அந்தத் துறை இயக்குனர் ஜி. சடகோபன் நிதி அமைச்சர் டாக்டர் நாவலரிடம் கொடுத்தார்.

## திருப்பூரில் பாரதி விழா

கோவை, ஆக. 25— திருப்பூர் நகராட்சி சார்பில் பாரதியார் நூற்றாண்டு விழா நகர்மண்டபத்தில் நடைபெற்றது. மாவட்டக்கலெக்டர் கே. மலைச்சாமி தலைமை வகித்தார். தமிழக அரசு தலைமைக் கொறடா இரா. மணிமாறன் எம்.எல்.ஏ. பாரதியார் படத்தை திறந்து வைத்து பேசினார். 'தாய்' பத்திரிகை ஆசிரியர் வலம்புரி ஜான் சிறப்புரை ஆற்றினார்.

விழாவையொட்டி புவியரசு தலைமையில் பட்டிமன்றமும் நடைபெற்றது. காலையில் கவியரங்கமும் நடைபெற்றது.

பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி திருப்பூர் நகரசபை சார்பில் 20 லட்சம் செலவில் கட்டப்படும் வணிக மையத்திற்கு "பாரதியார் நூற்றாண்டு நினைவு வணிக மையம்" என பெயர் சூட்டப்பட்டது. கோவை மாவட்ட மக்கள் தொடர்புஅதிகாரிபொன் சுப்பையாவும் மற்றும் அதிகாரிகளும் விழாவில் கலந்துகொண்டனர்.

பம்பாயில்

## 44 போலீசார் டிஸ்மிஸ்

பம்பாய், ஆக. 25— பம்பாயில் மேலும் 44 போலீசார் டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர்.

டிஸ்மிஸ் செய்யப்பட்ட போலீசாரின் மொத்த எண்ணிக்கை 67 ஆகிறது.

அங்கீகாரம் நிராகரிக்கப்பட்ட போலீஸ் சங்கத் தலைவர் ஷெவலே, தனக்கு முன் ஜாமீன் கோரி மனுச் செய்தார். அடிஷனல் செஷன் சு நீதிபதி அந்த மனுவை தள்ளுபடி செய்தார்.

வெளிநாடுகளில் இந்திய தொழிலாளர்;

## ஒழுங்குபடுத்த மத்திய சட்டம்: அமைச்சர் தகவல்

**சென்னை, ஆக. 25- வேலை தேடி வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்லப்படும் இந்தியர்கள் ஏமாற்றப்படாமல் இருக்க மத்திய அரசு சட்டம் ஒன்றைக் கொண்டுவர இருக்கிறது என்று மத்திய தொழிலாளர் நல அமைச்சர் பகவத்ஜா ஆசாத் தெரிவித்தார்.**

மத்திய தொழிலாளர் நல அமைச்சர் பகவத்ஜா ஆசாத் நேற்று சென்னையில் நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

இந்தியாவைச் சேர்ந்த தொழிலாளர்கள் வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டு ஏமாற்றப்படுகிறார்கள். ஒப்பந்தப்படி கொடுக்கப்பட வேண்டிய சம்பளம் மற்றும் வசதிகள் அந்த நாடுகளில் தரப்படுவதில்லை.

ஒரு நாட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டு வேறு ஒரு நாட்டில் இந்தத் தொழிலாளர்கள் நிர்க்

(5-ம் பத்தி பார்க்க)

7-ம் பத்தி தொடர்ச்சி)

கதியாக விடப்படுகிறார்கள் என்ற புகார்களும் அரசுக்கு வந்துள்ளன.

### சட்டம் வருகிறது

இப்படிப்பட்ட சம்பவங்கள் நிகழாமல் இருக்க மத்திய அரசு சட்டம் ஒன்றைக் கொண்டுவரவிருக்கிறது. இதன் மூலம் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் தொழிலாளர்கள் ஒழுங்குபடுத்தப்படுவார்கள்.

இவ்வாறு மத்திய அமைச்சர் பகவத் ஜா ஆசாத் கூறினார்.

முன்னதாக தேசிய உழைக்கும் மகளிர் மன்றம் சார்பில் கலைவாணர் அரங்கில் நடைபெற்ற நிகழ்ச்சியிலும் அமைச்சர் கலந்துகொண்டு பேசினார்.

மன்றத்தின் தலைவர் ஜெயா அருணாசலத்தின் சேவைகளை அவர் பாராட்டினார்.

இந்த நிகழ்ச்சிக்கு தமிழ்நாடு தொழிலாளர் நலத்துறை செயலாளர் கங்காதர் தலைமை வகித்தார். ஜெயா அருணாசலம் வரவேற்றும் பேசினார்.

மத்திய அமைச்சர் பகவத் ஜா ஆசாத்தின் ஆங்கிலப்பேச்சை தமிழ்நாடு அரசு செய்தித் துறை அதிகாரி பரஞ்சோதி தமிழில் மொழி பெயர்த்தார்.

நடன அரங்கேற்றம்:

## அமைச்சர் கோமதி-சீனிவாசன் பங்கேற்பு

சென்னை, ஆக. 25— செல்வி வத்சலாவின் நடனஅரங்கேற்றம் நாளை மாலை கலைவாணர் அரங்கில் நடைபெறுகிறது.

நடன விழாவிற்கு புலவர் இந்திரகுமாரி தலைமை வகிக்கிறார். சமூகநலத்துறைஅமைச்சர் கோமதி சீனிவாசன், கலெக்டர் கரியாலி, பல்லவன்போக்குவரத்துக் கழக நிர்வாக இயக்குநர் கே. ரவீந்திரன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, கலைமாமணி சுவர்ணமுகி, மணிவர்மா, வி. எஸ். ராகவன் மற்றும் பலர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்குகின்றனர்.